# ஜீவ வாக்கு.



ஸர் ஜகதீச சந்திர வஸு
செய்த பிரசங்கம்.



ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதியால்
தமிழில் செய்யப்பட்டது.





சென்னை
சுதேசமித்திரன் பவர் அச்சுக்கூடம்
1918

# முகவுரை.

புராதனப்பெருமையை மீண்டுமடைந்து தம்மக்கள் திரும்பவும் க்ஷேமத்துடன் சுகித்து வாழவே தற்போது ஆவல்கொண்டிருக்கும் பாரதமாதாவிற்குப் புகழும், கீர்த்தியும், ஏற்றமும் இயக்கமும் உண்டு பண்ணிவரும் அருமைப் புதல்வருள் மிகச்சிறந்த கல்விமானும், தேசாபிமானியுமாகிய ஸர். ஜகதீச சந்திரவஸு மிக முக்கியமானவர் என்பதை நான் விளக்கிக்காட்டவும் வேண்டுமோ? மேல் நாட்டுப்பிரகிருதி ரஸாயன சாஸ்திர முதலியவற்றில் தேர்ச்சிபெற்ற பின்னர், தம்முடைய மகா முயற்சியாலும், புத்தியின் கூர்மையாலும், பல புதிய தந்திரங்களைக் கண்டுபிடித்து ஜகமுழுதும் பிரசித்தியடைந்த இந்த இந்தியப் பெருமான் தாம் கண்டுபிடித்தஞானத்தையும், தத்துவங்களையும், தம் தாய்நாடு கைக்கொண்டு மென்மேலும் தம் தேசத்தவர் அனைவரும் அவைகளை விருத்தி செய்து தேசத்திற்கு நிரந்தரமான க்ஷேமங்களை விளைவிக்கும் நிமித்தம் புதிதாக, சாஸ்திராலயத்தைக் கல்கத்தாவில் ஸ்தாபித்து, தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் அதற்கு அர்ப்பணம் செய்திருப்பது யாவருமறிந்த விஷயம். அந்த ஞானக் கோயிலின் கைங்கரியங்களுக்கு நாட்டிலுள்ள எல்லோரும் உதவி புரிய முன் வரவேண்டுமென்பதை யார் மறுக்க முடியும்? ஆனால், இப்படிப்பட்ட ஆலயத்தில் விக்கிரக ரூபமான தெய்வத்தைத்தொழாவிடினும், தூணிலும் துரும்பிலும் குடிகொண்டு எவ்வித உயிர்க்குமுயிராய், சர்வாந்தர்யாமியாய் இருப்பதாக வேத வேதாதிகள் கூறும் பரமபொருளைக்கண்டு, அதன் குணங்களை ஆராய்ந்து அறிந்துகொள்வதற்காக ஏற்படுத்தப்பட்ட மகா தேவஸ்தானமென அவர் சாஸ்திராலயத்தை நாம் கருதி, அதில் உழைத்துவரும் அவரையும் பிரம்மமாக அறியவேண்டும். வேதாந்தியாகவும் அவரை நாம் மதிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இது காரணம்பற்றியே நமது உத்தம வேதாந்தியும், தேசபக்தருமான ஸ்ரீமான் பால கங்காதர திலகரின் பத்திரிகையாகிய "கேஸரி"யில் அவரை உண்மையான "வேதவித்" என்று பெயரிட்டு அவர் ஆதிகாலத்து மகரிஷிகள் எப்படி பிரம்மத்தை அறியப் பாடுபட்டார்களோ,

அவ்விதமே இ ரும் ஜீவ ராசிகளிலும் பிரகிருதி ராசிகளிலும் பிரம மத்தைத் தேடி, அதன் மூலமாய் மனுஷ்ய கோடிகளுக்கு எவ்வித க்ஷேமம் பிறக்கக் கூடுமென்று ஆராய்கிறார் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகவே, ஜகதீச சந்திரவஸு தம்மாலயத்தில் செய்த முதல் பிரசங்கத்தை வங்க பாஷையிலோ ஆங்கிலத்திலோ படித்து அறிந்துகொள்ள முடியாத நமது தமிழர்களின் பொருட்டு ஸ்ரீமான் சுப்பரமண்ய பாரதி இனிய நடையில் தமிழில் செய்திருப்பதை அனைவரும் ஆவலுடன் வாசித்து ஆனந்திப்பார்களென்றெண்ணி இப் புத்தகம் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. தமிழ் மக்கள் யாவரும் இதை அங்கீகரிப்பார்களென நம்புகிறேன்.

எ. ரங்கசாமி அய்யங்கார்

ஓம் சக்தி.

# ஜீவ வாக்கு.

காளிகட்டத்தில் ஜகதீச சந்திர வஸு தம்முடைய சாஸ்த்ர மாளிகை திறக்கும் போது பேசியதின் சில பகுதிகளை

சி. சுப்ரமண்ய பாரதி தமிழில் செய்தது.

ஜகதீச சந்த்ரர் சொல்லுகிறார்.

## இது கோவில்.

இன்று இந்த ஸங்கத்தை பாரத மாதாவுக்கு அர்ப்பணம் செய்கிறேன், இது சாஸ்த்ர (ஸயன்ஸ்) சோதனைக் கூடம் மாத்திர மன்று; கோவிலு மாகும்; எப்படி யெனில்;

ஐம்புலனாலும், உருவைப்பெரிதாக்கும் செயற்கைக் கருவிகளாலும்காணக் கூடிய உண்மையைத் தான் ஸ்தூல வழிகளில் காட்டலாம். அதாவது, காதுக் குக் கேட்கும் ஒலி மிக நுண்ணிதாய்க் கேளாது போயின், அங்கும் கருவி கொண்டு கேட்கலாம். விழிக்குப் புலப் படாததைக் கருவி கொண்டு பார்க்க லாம். விழிக்குப் புலப்படும் எல்லை சிறிது; புலப்படாதது பெரிது. குறைபட்ட இந்திரியங்களை யுடைய மனிதன் அவற்றால் யுக்தியாகிற தோணி செய்து அத்தோணியால் எண்ணப் பெருங் கடல்களில் யாத்திரை செய்கிறான்.

ஆனால் நுண்ணிய ஸயன்ஸ் கருவிகளுக்குப் புலப்படாத உண்மைகளும் உள. வாழ்நாள் முழுதும் சோதித்தாலும், அசையாத பக்தியால் மாத்திரமே காணத்தக்கன உண்டு. அப்படிப்பட்ட உண்மைகளைக் கோயில் கட்டி நிலை நாட்டுகிறோம். எந்த பக்தியை நிலைநிறுத்த இந்த சாஸ்த்ர மாளிகை யாகிற கோயிலைக் கட்டினேன் என்றால்:

ஒருவன் ஒரு பெரிய காரியத்தில் தன்னை முழுதும் ஈடு படுத்தினால் அடைத்திருந்த கதவு திறக்கும். வெற்றி கிடைக்கும். அஸாத்ய மென்று நினைத்தது ஸாத்யமாய் விடும்.

## ஸ்வ சரித்ரம்.

சாஸ்த்ரம் கற்பிக்கிற தொழிலை நான் கைக்கொண்டு வருஷம் முப்பத் திரண்டாயின. ஹிந்து தேசத்தானுடைய புத்தி இயற்கையாகவே இயற்கை

நால் ஆராய[illegible] சிறகாதென்றும், பரலோக ஆராய்ச்சிகளுள் பாய்ந்து விடுமென்றும் பலர் கருதினர். அன்றி ஒரு வேளை ஆராய்ச்சித் திறமையும், பார்வை நுட்பமும் சிலரிடம் இருந்தாலும், அவர்களுக்கு வேண்டிய சோதனைக் கருவிகளும், சோதனைக் கூடங்களும் இந்நாட்டில் இல்லாதபடியாலும், கை தேர்ந்த தச்சர்கள் இல்லாதபடியாலும் அவர்களுடைய தொழில் முன்னுக்கு வாராதென்றும் பலர் கூறினர். இது முழுதும் உண்மையே. எதிரில் இருப்பதை இல்லையென்று சொல்லிப் பயனில்லை. அதை தைரியமாக அங்கீகாரம் செய்துகொண்டு நம்முடைய காரியத்தை ஜயிக்க வேண்டும். எளிய கருவிகளுடன் பெரிய தொழில் செய்த பரம்பரையில் நாம் பிறக்க வில்லையா?

## தோல்வி வெற்றி.

ஒருவன் தன் உழைப்பில் எத்தனை சிரத்தை செலுத்த முடியுமோ அத்தனையும் நாம் நமது தொழிலில் செலுத்தக் கடவோம் என்று இருபத்து மூன்று வருஷங்களுக்கு முன் இதே தினத்தில் ப்ரதிக்ஞை செய்து கொண்டேன். அன்று முதல் ஆறு மாஸத்திற்குள் எனது சோதனைக் கூடத்தில் மின்-அலைகள் சம்பந்தமான சில கடுமையாகிய சங்கைகள் தீர்க்கப் பட்டன. அது கண்டு லார்ட் கெல்வின் (Kelvin) லார்ட் ரேலே (Raylaigh) முதலிய பெரிய பௌதிக சாஸ்த்ரிகள் மிக வியப்பெய்தினர். இங்கிலாந்தில் ப்ரதான சாஸ்த்ர ஸங்கமாகிய "ராயல் ஸொஸைடி" யார் தம்மிடம் பொது அறிவு வளர்ச்சிக்கென்று பார்லிமெண்ட் சபையாரால் கொடுக்கப்பட்ட விசேஷ நிதியிலிருந்து தாமாகவே எனக்கு ஒரு தொகை உதவியும், நான் கண்டு பிடித்த புதுமைகளை ப்ரசுரம் செய்தும், என்னை கௌரவப் படுத்தினார்கள். அடைத்திருந்த கதவு அன்று திடீரென்று திறந்தது. அன்று கொளுத்திய தீவர்த்தி மேன்மேலும் தழல் வீசி எரியும் என்ற நம்பிக்கை உண்டாயிற்று. ஆனால் மனிதனுடைய பக்தி சிரத்தைகளுக்குத் திரும்பத் திரும்பச் சோதனை உண்டாகும். அப்பால் ஐந்து வருஷம் என் அபிவிருத்தி தடைப்படாமலிருந்தது. என் தொழிலுக்குண்டான தயா பூர்வகமான விசாலித்த கீர்த்தி உச்ச ஸ்தானத்தை அடையும் என்று தோன்றின ஸமயத்தில் திடீரென்று எதிர்பாராத ஒரு மாறுதல் உண்டாயிற்று.

## உயிருடையது; உயிரில்லாதது.

என் சோதனைகளை நடத்திக்கொண்டு போகையில், அவசமாகவே, பௌதிக சாஸ்த்ரத்திலிருந்து, அதற்கும் சரீர சாஸ்த்ரத்துக்கும் நடு எல்லையில் வந்து சேர்ந்தேன். அங்கே எல்லைக் கோடுகள் மறைந்து ஜீவனும் ஜடமும் தம்முள்ளே மருவும் ஸ்தானங்கள் தென்பட்டமை கண்டு வியப்படைந்தேன். ஜடம் செத்துக் கிடக்கவில்லை. அதற்குள்ளே பல சக்திகள் புகுந்து விளையாடுவதால், அது அதிர்ச்சி நிலையில் இருக்கிறது. உலோகம், பூண்டு, மிருகம் மூன்றிலும் ப்ரத்யுத்தரம் ஒன்று போலவே கிடைப்பதால், மூன்றும் ஒரு பொது விதிக்குட்பட்டன என்று கண்டு பிடித்தேன். சோர்வும், தளர்ச்சி

யும், தெளிவும், எழுச்சியும், பின் என்றும் உ... போவதாகி மரணம் என்ற நிலையும், மேற்படி மூன்றிலும் ஒன்று ...லில்லை காணப் படுகின்றன. இந்தப் பெரிய பொது விதியைக் கண்டு நான் ஆச்சர்யப்பட்டு, எனது தீர்மானங்களை "ராயல் ஸொஸைடி" யார் முன்பு வெளியிட்டேன். ஆனால் அங்கு வந்திருந்த சரீர சாஸ்த்ரிகள், என் உபந்யாசம் முடிந்தவுடனே என்னை நோக்கி:—"ஏற்கெனவே பௌதிக சாஸ்த்ர ஆராய்ச்சியில் உம்முடைய ஜயம் நிச்சயமாய் விட்டது. அத்துடன் திருப்தி கொண்டிரும். எங்கள் எல்லைக்குள்ளே வரவேண்டாம்" என்றார்கள். ஓஹோ! நமக்குத் தெரியாமலே நாம் முன் பின் வழக்கமில்லாத ஒரு கட்டுப்பாட்டுக்குள் காலை வைத்து விட்டோம்; சிலருடைய "மாமூலை"க் கடந்து விட்டோம் போலும்! என்று மனதில் நினைத்துக் கொண்டேன். கிறிஸ்து மதக் கொள்கைகளுக்கு விரோதம் ஏற்படுமோ என்றமூட எண்ணமும் மேற்படி சாஸ்த்ரிமாருக்குச்சிறிதளவு தம்மை யறியாமலே, இருந்தது போலும்! புது ஆராய்ச்சி பண்ணினால் தெய்வத்துக்குக் கோபம் வருமென்று சில மூடர் நினைக்கிறார்கள். அண்டத்திலிருப்பதை யெல்லாம் பிண்டத்துக்குள்ளே காட்டி அணுவுக்குள் மஹத்தை மறைத்து வைத்து, இந்த ஸ்ருஷ்டியாகிய விந்தையை நம்மைச் சூழ நிறுத்திய ஈசன் தானே நமக்கு மேன்மேலும் தொளைத்துத் தொளைத்துப் பரிசோதனை செய்யவேண்டும் என்ற புத்தியைக் கொடுத்தவனன்றோ?

தவிரவும் மேற்படி சாஸ்த்ரிகளுடைய மனதில் ஹிந்து தேசத்தானுடைய புத்தியே கட்டுக் கடங்காத கற்பனையிலும், ஸூக்ஷ்ம லோக பரிசோதனையிலும் தான் செல்லும், ஸயன்ஸ் (சாஸ்தர) பரிசோதனையில் செல்லாது என்ற பிழைக் கருத்தும் கலந் திருந்தது. ஆனால் பல படத் தோன்றும் காட்சிகளுக்கிடையே ஒரு பொது விதி கண்டு பிடிக்கும் தழல் கின்ற கற்பனா சக்தியை நம்மவர் மந்த்ர பலத்தால் கட்டுப்படுத்தி ஆளுகிற விஷயம் மேற்குத் திசை யாருக்குத் தெரியாது. அங்ஙனம் கட்டுப் படுத்துவதனால், மனதை உண்மைத் தோட்டத்தில் தீராத பொறுமையுடன் ஊன்றுவித்துக் காத்திருந்து மீட்டு மீட்டும் புன ராலோசனை பண்ணி மீட்டு மீட்டும் சரிபார்க்கும் சக்தி உண்டாகிறது. சாஸ்த்ர இலாகாவிலே கூடப் புதிய உண்மையைக் கண்டால் பழைய கொள்கை சண்டைக்குத் தான் வருகிறது. ஆதலால் மேன்மேலும் ருஜு சேர்த்து, ஆரம்பத்தில் உண்டான அவநம்பிக்கையைத் தீர்க்கக் கூடிய காலம் வரும் என்று நான் பொறுமையோ டிருந்தேன். வேறு பல ஸங்கடங்கள் உண்டாயின. என்னைப் பற்றி வெளிநாடுகளில் பல தப்பெண்ணங்கள் பரப்பப் பட்டன. அவற்றை யெல்லாம் நான் நெடுந் தூரம் விலகித் தனியே இந்தியாவில் இருந்து அப்போதைக் கப்போது மாற்றுதல் ஸாத்யப் படவில்லை. இதனால் அடுத்த பன்னிரண்டு வருஷம் எனக்குண்டான நிலைமை மிகவும் ஏக்கமுடையதாயிற்று. எனது சரித்திரத்தின் இந்தப் பகுதியைச் சுருக்கமாகச் சொல்லும்படி நேரிட்ட காரணம் என்னவென்றால்:—உண்மை தேடுவோனுடைய வாழ்க்கை மிருது வாழ்க்கை யன்று; தீராத போராட்டம்;

# ஜீவவாக்கு

என்பதைத் ... மன்ற நோக்கமே காரணம். லாப நஷ்டங்களையும், தோ... வெற்றிகளையும் ஒன்றுபோலக் கருதித் தன் ஜீவனை நைவேத்யமாக்குதல் அவன் கடமை.

என்னை நெடுங்காலம் சூழ்ந்து நின்ற இருள் 19.4-ம் வருஷத்தில் விலகிற்று. அவ்வருஷத்தில் என்னை உலகமெங்கும் போய் சாஸ்த்ர ப்ரசாரம் செய்து வரும்படி இந்தியா கவர்ன்மெண்டார் அனுப்பினர்கள். அப்போது பூமண்டலத்தில் உள்ள முக்யமான சாஸ்த்ர சங்கத்தார் முன் நான் கண்டு பிடித்த புதுமைகளைக் காண்பிக்க வழி உண்டாயிற்று. அதிலிருந்து என் கொள்கைகளுக்கும் முடிவுகளுக்கும் அங்கீகாரம் ஏற்பட்டது. பூமண்டலத்தாரின் சாஸ்த்ர அபிவிருத்தியில் பாரத தேசத்தின் உதவி எத்தனை ப்ரதான மென்பதை உலகத்தார் அறிந்தனர். சாஸ்த்ர ஆராய்ச்சி செய்வோருக்கு இந்த தேசத்தில் பொறுக்கமுடியாத சிரமம் உண்டாகுமென்பதை என் அனுபவத்தினுல் கண்டேன். ஆயினும், "எனக்குப் பின்னே வருவோருடைய பாதையில் இத்தனை கஷ்டங்கள் இல்லாதபடி செய்வேன். பல வருஷம் பாடுபட்டு வென்றதை இனி ஹிந்து தேசம் எப்போதும் இழக்கலாகாது." என்று உறுதியாய்த் தீர்மானம் செய்து கொண்டேன்.

## இரண்டு ஆதர்சங்கள்.

(ஆதர்சம்=Ideal, உத்தம லக்ஷ்யம்)

இப்போது ஹிந்து தேசத்தால் வென்று காக்கப்படவேண்டிய பொருள் யாது? சிறிய எல்லேப்பட்ட, வஸ்துவினுல் பாரத தேசம் திருப்தியடையுமா? நம்முடைய மஹத்தான பூர்வ சரித்திரப் பெருமைக்கும் சாஸ்த்ரப் பெருமைக்கும், நாம் நிலையில்லாத தாழ்ந்த லாபத்தை விரும்புதல் தகுமா? இப்போது தேசத்தாரின் முன்னே இரண்டு ஆதர்சங்கள் இருக்கின்றன. இவை பரஸ்பர விரோதமுடையன அல்ல. பரஸ்பரம் ஸஹாயமானவை. முதலாவது, ஐரோப்பியர்போல லௌகிக ஜயத்தை ஸாதித்தல். ஸர்வ தேசப் போராட்டத்தின் சுழலுக்கு நடுவே ஹிந்து ஸ்தானம் அகப்பட்டுக்கொண்டிருக்கிறது. கல்வியைப் பரப்பி, நகரத்தானுக்குரிய கடமை பொறுப்புக்களை ஒவ்வொருவனும் நேரே நிறைவேற்றி, கைத்தொழில், வ்யாபார சம்பந்தமான பலவித ஊக்கங்களாலே நமது நாடு எல்லாவிதங்களிலும் திறமை யேறவேண்டும். தேசக் கடமையின் இந்த முக்யமான பகுதிகளைப் புறக்கணித்தால், தேச ஜீவனுக்கே ஆபத்துண்டாகும். லௌகிகத்தில் அவரவர் ஆசையை நிறைவேற்ற விரும்பினுல், அதுவே மேற்படி ஊக்கங்களுக்குப் போதுமான தூண்டுதலாகும். ஆனுல் இவற்ருல் மாத்திரம் ஒரு தேசத்தின் உயிர் நிலைபெற்றுவிடாது. இவற்ருல் மேற்குத் திசையார் அதிகாரமும் செல்வமும் பெற்றனர். அவர்களுடைய சாஸ்த்ரமானது ஜ்வர வேகமாக முற்பட்டுச் செல்லுகிறது அறிவை ஜீவன் வழியாக்க முயலுகிருர்கள். சாஸ்த்ரத்தால் பிறரைக் காக்க வேண்டுமென்ற எண்ணத்தைக் காட்டிலும் அழிக்க வேண்டுமென்ற எண்ணம்

மிருதியாகக் கொண்டிருக்கிறார்கள். அடக்கியா[illegible]யான்றில்லா மல், நாகரிகமானது தேசப் பெருங்குழியின் ஓரத்தில் [illegible]க்கொண்டு நிற்கிறது. ஸர்வ நாசத்தில் முடிவு பெறக்கூடிய இந்த வெறிகொண்ட வேகத்திலிருந்து மனிதனைக் காப்பாற்ற வேண்டினால், அதற்கு மற்றோர் துணையாதர்சம் வேண்டும். தீராத ஆசை வலையில் சிக்கி, உலக ஜயத்தின் முடிவான பயனைக் கருதாமல், எதிர்த்துச் செய்வதிலும் கூடிச் செய்தலே உலகத்துக்கு நன்மையென்பதை மனிதன் மறந்து விட்டான். ஆனால் ஹிந்து தேசத்திலே மாத்திரம் எந்த நாளிலும் ஒரு சில மஹான்கள் துறவு கொள்ளாமல் இல்லறத்திலிருந்து விடா முயற்சியுடன் பாடுபட்டு, க்ஷணிக இன்பங்களை விரும்பாமல், மனுஷ்ய வாழ்க்கையின் பரம தர்மத்தைத் தேடுவோராய், இருந்து கொண்டே வருகிறார்கள். போருக்கஞ்சிப் பின் வாங்கும் பலஹீனன் எதையும் சம்பாதிக்கமாட்டான். எனவே அவன் துறக்கத்தக்க பொருளொன்றுமில்லை. எவன் முயற்சியினால் வெற்றி கொண்டானோ, அவனே தனது வெற்றி யனுபவத்தால் உலகத்தை வாழ்விக்க முடியும். அங்ஙனம் உழைப்பினால் ஆதர்சத்தை நிறைவேற்றிய பலருடைய திருஷ்டாந்தம் சேர்ந்து ஹிந்துஸ்தானத்தில் அது ஒரு பரம்பரை ஸம்ப்ரதாயமாய் விட்டது. யௌவனத்தை மீட்டுகிற திறமை பாரத மாதாவுக்கிருப்பதால், அவள் ஓயாமல் புதிது புதிதாகத் தோன்றும் உலக மாறுதலுக்கெல்லாம் இசைந்து சாகாமல் பிழைத்து வருகிறாள். பாபிலோன், நீல நதிக்கரை, இவற்றின் உயிர் செத்துப் புனர் ஜன்மமாய் விட்டது. நாம் என்றும் சாகாமல் இருக்கிறோம். காலம் கொண்டு தரும் மாறுதல்களை யெல்லாம் விழுங்கி ஜீர்ணமாக்கிக் கொள்ளும் திறமை பாரத மாதாவுக்குண்டு.

முதற் கூறியதற்குச் சார்பான இரண்டாம் ஆதர்சம் யாதெனில்:— ஈகை, பிறரைச் செழிக்கச் செய்தல். சுருக்கம்:—மனுஷ்ய ஜாதியின் உயர்ந்த நலத்தைக் கருதித் தன்னைத்தானே த்யாகம் செய்து விடுதல். இதைத் தூண்டிவிடும் சக்தி தனக்கென்ற அவாவினால் உண்டாகாது. எல்லாச் சிறுமைகளையும் அழித்துப் பிறர் நஷ்டத்தால் வருவது யாதாயினும் அதுவே தனக்கொரு லாபமென்று கருதும் மடமையை வேரறுப்பதனால் உண்டாகும். சலன காரணங்களை யெல்லாம் நீக்கி மனம் சாந்திமுத்ரை அடைந்தாலொழிய உண்மை கண்ணுக்குப் புலப்படாது. இதை நான் நிச்சயமாக அறிவேன். முன்னுக்கு வர விரும்பும் பிள்ளைகளில் பலருக்கு தேச கார்யமும் இதர வ்யாபாரங்களும் தக்க தொழில்களாம். ஆனால் எனக்கு மாணாக்கராக வரும்படி நான் அழைக்கிற சிலர் எப்படி இருக்க வேண்டுமென்றால், உள்ளத்திலே தோன்றும் கட்டளையைத் தழுவி குண வலிமையும், கார்ய உறுதியும் உடையராய், வேறு பயன் கருதாமல் அறிவை வெல்லுவதிலும், உண்மையின் முகத்தை நேருக்கு நேராக நோக்குவதிலும் விருப்பம் உடையவராய், வாழ்நாள் முழுதும் அதற்காக உழைக்கத் துணிந்தவரே எனக்கு மாணாக்கராக வரவேண்டும்.

# ஜீவ[illegible]ாக்கு

## [illegible] வளர்த்தல்? அதைப் பரப்பல்.

உயிருடையது, இல்லாதது இரண்டையும் தன்னுள் அடக்கியதான இந்தப் புதிய சாஸ்திரத்தில் ஓயாமல் தோன்றக்கூடிய புதிய சங்கைகளை மேன்மேலும் பரிபூர்ணமாக ஆராய்ச்சி செய்தல் நமது ஸங்கத்தின் நோக்கங்களில் ஒன்றாம். இந்த வழியில் சிரத்தையுடைய மாணாக்கர்கள் சிலர் ஏற்கெனவே என்னிடம் சேர்ந்திருக்கிறார்கள். இவர்களை நான் பத்து வருஷமாய் ஊக்கம் பயிற்றி வருகிறேன். இவர்களுடைய தொகை இப்போது சுருக்கந்தான். போகப்போக அதிகப்படுத்த சௌகரியங்கள் உண்டாகலாம். சமர்த்தப் பிள்ளைகள் அதிகப்பட்டால், அதிலிருந்து காலத்தாலும், உழைப்பினாலும் தனியாராய்ச்சித் திறமையும், லாபகரமான யுக்திகளும், பின்னொருகால் படைப்புத் திறனும் விளைய இடமுண்டு. ஆனால் பரிசோதனையில் தக்க நிர்ணய மில்லாவிட்டால் முதல் தரமான வெற்றி உண்டாகாது. நேற்றைக் காட்டிலும் இன்று நிர்ணயம் அதிகம் வேண்டும். இன்றைக் காட்டிலும் நாளை அதிகம் வேண்டும். இதைக் கருதியே நமது பிரவேச மண்டபத்தில் நீண்ட வரிசையாசத் தத்தம் கூடுகளுடன் வைத்திருக்கும் நுட்ப உணர்ச்சி யந்திரங்கள் ஆக்கப்பட்டன. இவற்றால் வஞ்சகமான தோற்றத்துக்குள்ளே மறைந்து நிற்கும் உண்மையைக் காணும் பொருட்டு, எத்தனை காலம் பாடுபட்டோம் என்பது விளங்கும். மனுஷ்ய எல்லைகளை வெல்லுவதில் ஏற்படும் உழைப்பும், திடனும் புத்திக் கூர்மையும் எவ்வள வென்பது தெளிவாகும். இந்தத் துறைகளில் சாஸ்த்ரம் வளர்வதனால், மேன்மேலும் தந்திரம் மிகுதியாகி, அதினின்றும் நமது தொழிலாளிகளுக்குக் கைவன்மையும், கற்பனாசக்தியும், விரைவில் விருத்தி யடையுமென்று நினைக்கிறேன். கைவன்மை உறுதியாய் விட்டால் பல தொழில் துறைகளில் அதை லாபகரமாக உபயோகப் படுத்தலா மென்பதில் ஐயமில்லை.

சாஸ்த்ரத்தை வளர்த்தலும் அறிவைப் பரப்புதலுமே இந்த ஸங்கத்தின் முக்ய நோக்கங்களாம். இந்த ஞான மாளிகையில் உள்ள மண்டபங்கள் அனைத்திலும் பெரிதாகிய ப்ரஸங்க மண்டபத்தில் இப்போது கூடியிருக்கிறோம். எங்கும் சோதனைக் கூடத்துடன் இத்தனை பெரிய ப்ரஸங்க மண்டபம் கட்டுவது வழக்க மில்லை. நாம் புதிதாகக் கட்டின காரணம் என்ன வென்றால், அறிவில் அபிவிருத்தி உண்டாகும்போதே, உடனுக்குடனே, அதை இயன்றவளவு இந்நகரத்திலும் இந்நாட்டிலும் எப்போதும் பரவும்படி செய்யவேண்டு மென்ற நோக்கமே காரணம். பட்டதாரிகளுக்கு மாத்திரமென்று வைக்காமல் இந்த மண்டபம் இது முதல் இனி எக்காலத்திலும் எல்லா ஜாதியாருக்கும், எல்லா பாஷையாருக்கும், ஆணுக்கும் பெண்ணுக்கும் பயன் படும்.

இங்கு செய்யப்படும் உபந்யாஸங்கள் இரவல் விஷயங்களைத் திரும்பச் சொல்வன அல்ல. அப்போதப்போது கண்டுபிடித்த உண்மைகளை முதல் முதல் இங்கு பொது ஜனங்களுக்குக் கூறுவோம். சுமார் ஆயிரத்தைந்நூறு

பேர் இந்த மண்டபத்தில் உட்காரலாம். இது [illegible] சபையார் முன்பு அவற்றை நிரூபணம் செய்வோம். எனவே அறிவை வளர்த்தல்; பரப்புதல் இரண்டிலும் எங்களால் இயன்ற தொழில் செய்து ஒரு வித்யாலயத்துக் கிருக்கவேண்டியதாகிய பெரு நோக்கத்தை இடைவிடாமல் பாதுகாத்து வருவோம். மேலும் நமது ஸங்கத்தின் செய்கைகளை அப்போதப்போது ஒழுங்காக ப்ரசுரம் செய்து வருவோம். ஆதலால், ஹிந்துஸ்தானத்தின் இந்தத் தொழில் உலக முழுதும் பரவும். நாம் கண்டு பிடிக்கும் புதுமைகள் உலகத்துக்கே பொது உடைமையாகி விடும். எந்த மந்திரத்துக்கும் ஸர்க்காரிடமிருந்து அனுபோக பாத்ய பத்ரம் (பேடன்ட்) வாங்க மாட்டோம்.

ஏனென்றால், அறிவைத் தனது லாபத்துக்கெனவே பயன் படுத்தல் பிழையென்பது நமது தேசத்து வழக்கம். இங்கு உத்யோகஸ்தர் தவிர, மாணுக்கரும் சிலர் இருப்பார்கள். இவர்கள் தத்தம் தொழிலால் விசேஷத் தகுதி காண்பித்தவர்கள். ஆராய்ச்சியிலேயே தமது கால முழுதையும் செலவிட விரும்பினேர். இவர்களுக்கு நாம் கூட இருந்து பயிற்சி செய்து வைப்போம். எனவே, இவர்களின் தொகை ஆரம்பத்தில் சொற்பந்தான் இருக்க முடியும். அளவா பெரிது? குண மன்றே பெரிது? மேலும் நமக்குள்ள சொற்ப இடத்துக்குள் கூடியவரை, எல்லா தேசங்களிலிருந்தும் மாணுக்கர் வந்து பயன் பெறவேண்டு மென்பது என்னுடைய விருப்பம். இது நமது நாட்டுப் பூர்வ வழக்கத்தை அனுசரிப்பதேயாம்.ஏனெனில் இருப்த்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு நளந்தா, தக்ஷசிலா என்ற க்ஷேத்ரங்களில் இருந்த வித்யாலயங்களில் உலகத்தின், பல பகுதிகளிலுமிருந்து சாஸ்த்ரம் பயில வந்த மாணுக்கருக்கு நமது தேசம் நல்வரவு கூறிற்றன்றே?

## உயிரின் அலை

இந்த விசால நோக்கத்தால், நமது முன்னேரின் மேலான வழக்கத்தைப் பாதுகாப்பது மாத்திரமே யன்றி, அதினிலும் சிறந்த வழிகளால் உலகத்துக் குத் தொண்டு புரிவோம். உலக முழுதிலும் பொதுவாக அடிக்கும் உயிர்க் கடலின் அலைக் கிளர்ச்சியையும், நன்மை, உண்மை, அழகு என்ற மூன்றினிடத்தும் உலகத்துக்குள்ள பொது அன்பையும் உணர்ந்து உலகத்துடன் ஒன்று பட்டிருப்போம். உயிர்ப் பள்ளிக்கூடமும், உயிர்த் தோட்டமும் ஆகிய இந்த சாஸ்த்ராலயம் கட்டுவதில் சிற்ப சாஸ்த்ரத்தைப் புறக்கணிக்கவில்லை. அஸ்திவார முதல் சிகரம் வரை, இதே மண்டபத்தில் கூட, தளம் முதல் மேற் கூரை வரை கைதேர்ந்த சிற்பி எங்களுடன் கூட இருந்து தொழில் செய்தார். உயிரின் செயல்களைப் படிக்கத் தோட்டமே சரியான பள்ளிக்கூடம். அங்கு கொடிகளும், செடிகளும், மரங்களும் தமக் கியற்கையான சுற்றுப் பொருள்களின் அதிகாரத்துக் குட்படுகின்றன. அதாவது, வெயிலுக்கும், காற்றுக்கும், பாதி இரவில் நக்ஷத்திரம் பொதிந்த வெளிக் கூரையின் கீழ் பனிக்கும் உட்படுகின்றன. தவிரவும்: அவற்றை ப்ரத்யேகமாகப் பலவித ஒளி

களின் வர்ணச் செய்கைக்கு, கண்ணுக்குத்தெரியாத கிரணங்களுக்கும், மின்னேறிய தரைக்கும், இடியேறிய காற்றுக்கும் உட்படுத்திச் சோதனைகள் போடவும் செய்கிறோம். எல்லா இடங்களிலும் அவை தத்தம் அனுபவத்தைத் தத்தம் லிபியில் எழுதும். உயர்ந்த இடத்தில் நிழலில் இருந்து மாணாக்கன் இந்த ஜீவ சித்ர வரிசைகளைப் பார்ப்பான். எவ்விதமான மனக் கலக்கத்துக்கும் ஹேது வில்லாமல், தனிமைப்பட்டுத் தன்னை இயற்கையுடன் லயப்படுத்தப் பயில்வான். உயிராகிய பெருங்கடலில், புறத்தோற்றமாகிய வேற்றுமையைக் காட்டிலும் ஒற்றுமையே பெரிதென்பதை மெல்ல மெல்லத் தேறுவான். இசைக் கேட்டினிடையே இன்னிசையுணர்வான்.

## எதிர் நிலை.

நமது சாஸ்த்ராலயத்தின் தொழிலை விசாலப்படுத்தி, உறுதி செய்ய எதிர்காலத்தையே நம்பி யிருக்க வேண்டுமென்று சில வாரங்களுக்கு முன்வரை நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால் இப்போது தேவைக்குத் தகுந்த ஜவாப் கிடைத்து வருகிறது. மிகுந்த உதாரத்துடன் கவர்ன்மெண்டார் இந்த சபஸ்த்ர ஸங்கத்தை ஸ்திரமாகக் காப்பதற்குப் பொருளுதவி செய்வதாக வாக்களித் திருக்கிறார்கள். இந்த சுதேசீயமான முயற்சியில் ஜனங்கள் காட்டுகிற சிரத்தைக்குத் தகுந்தபடி அவர்கள் திட்டம் போட்டுக் கொடுப்பார்கள். போதுமான தொகை சேகரித்துக் கொடுக்கவேண்டுமென்ற கருத்துடையோர் பலரிடையே முதல் இரண்டு ஸஹாயங்கள் நமக்கு பம்பாயில் உள்ள கோடீசுவர வியாபாரிகள் இருவரிடமிருந்து கிடைத்தன. இவர்களுக்கும் எனக்கும் இதற்கு முன் நேரிலே பழக்கம் கிடையாது; மேற்கு மாகாணத்தில் சில கன்னிகைகளிடமிருந்து வந்த காயிதமொன்று என் மனதை மிகவும் உருக்கிற்று. அந்தக் காயிதத்துடன், "நமது தாய்நாட்டின் தொண்டுக்காக" என்று அவர்களுடைய சிறு பணவுதவியும் அனுப்பி யிருந்தார்கள். ஸ்வதேசத்தின் குழந்தைகளை யெல்லாம் ஒன்றாகக் கட்டும் பாசத்தைத் தாய் நெஞ்சுதான் (அதாவது ஸ்த்ரீகளுடைய நெஞ்சுதான்) அறியும். பாரத மாதா கேட்கும்போது ஆண் தன் உயிர் வலியையும், பெண் பக்தி கொண்ட தொழிலையும் கொடுக்கத் தொடங்கி விட்டபடியால் இனி எதிர்காலத்தைக் குறித்து நமக்கு அச்சமில்லை. இதிலே ஆணைக் காட்டிலும் பெண்ணின் உதவியே மேலானது ஏனென்றால், தவத்தாலும், தன் மறுப்பாலும் அவளே ஸூக்ஷ்ம திருஷ்டி அதிகமாகப் படைத்தவள். ஹிமய மலையில் தனியாக யாத்திரை செய்யும் ஒருவர் என்னை ஞாபகத்தில் வைத்திருந்து, எனக்குச் சந்தோஷமும் நம்பிக்கையுமான செய்தி சொல்லி யனுப்பினார்.

இங்ஙனம் நீண்ட தூரத்தை ஸமீபமாக்கி வேற்றுமைகளையெல்லாம் நீக்கித் தருகிற சக்தி எது? அதை நான் போகப் போகத் தெரிந்துகொள்வேன். அதுவரை என் மனதில் அஃதோர் உணர்ச்சியாகச் சோயில் கொண்டிருக்கும் எனக்கு விதிக்கப்பட்ட தொழிலில் நான் முற்பட்டுச் செல்லுகிறேன்.

இடையூறுகளுக்குக் கலங்காமல் தூரத்திலும் ஸமீபத்திலும் எனக்கு நன்மை வேண்டியிருப்போரின் அன்பே துணையாய் வர, நான் முன்னேறிப் போகிறேன்.

## செடியின் உயிர்; ஜந்துவின் உயிர்.

உயிரற்ற ஜட பதார்த்தத்தில் உத்தரம் சொல்லும் குணம் இருப்பதைப் பரிசோதனை பண்ணியதிலிருந்து, ஜந்துக்களின் உயிர்த்தொழிலுக்கும், செடிகளின் உயிர்த் தொழிலுக்குமுள்ள ஒற்றுமையை நீண்டகாலம் பரிசோதனை செய்யும்படி இயல்பாகவே மூண்டது. செடிகள் பொறுமையுடையனவாய் பெரும்பாலும் அசைவில்லாதனவாகத் தோன்றுகின்றன. வரையறைப்பட்ட சலனமுடையன. ஆதலால், அவற்றின் சோதனைக்கு அதி ஸூக்ஷ்மமான கருவிகள் கண்டு பிடித்தல் அவசியமாயிற்று. லேசான அதிர்ச்சியை மஹத்தாகக் காண்பித்துச் செடியின் உணர்ச்சிக் காலத்தை ஒரு விநாடியின் ஸஹஸ்ராம்சம் வரை அளந்து பார்க்கக்கூடிய கருவிகள் வேண்டியிருந்தது. மஹா ஸூக்ஷ்மமான சலனங்களை அளந்து குறித்து வைத்திருக்கிறோம். சில ஸமயங்களில் ஒளியின் ஒற்றை அலைக்குள்ள நீளத்தின் ஒரு பகுதியைக் காட்டிலும் சிறிய நீளத்தை அளந்திருக்கிறோம். செடி யுயிரின் ரஹஸ்யங்கள் இங்ஙனம் முதல் முதலாக அவற்றின் ஸ்வ ஹஸ்த லிகிதங்களாலேயே ப்ரகாசமாயின. செடிதானே எழுதின இந்த எழுத்தின் ஸாக்ஷ்யத்தால், செடிகளைச் சுணை யுடையன என்றும் இல்லாதன என்றும் இரண்டாகப் பிரிக்கும் பண்டை வழக்கம் பிழையென்று தெரியலாயிற்று. செடிகளுக்கும் விசேஷமாக கெட்டி மரங்களுக்கும் சுணையில்லை யென்ற எண்ணம் தப்புக் கொள்கையாலும், ஆராய்ச்சிக் குறைவாலும் ஏற்பட்டது. இதற்கொரு ஸமீப த்ருஷ்டாந்தம், பரீத் பூரில் மாலை தோறும் கும்பிடுவதுபோலே முடிவணங்குகிற "ஜபம்செய்யும் தென்னைமர"த்தின் அற்புதச் செய்கையாலே கண்டோம். என்னுடைய சோதனைகளால், எல்லாச் செடிகளும் மரங்களும் தம்மைச் சூழ்ந்த பொருள்களில் உண்டாகும் மாறுதல்களை முற்றும் உணர்கின்றன என்பது ருஜுவாகிறது. எல்லா விதமான தூண்டுதல்களுக்கும் அவை ப்ரத் யுத்தரம் செய்தல் நமது கண்ணுக்குப் புலப்படுகிறது. ஒற்றைச் சிறு மேகம் தனியே போவதால் ஒளியில் உண்டாகும் சலனங்களுக்குக் கூடச் செடி ஜவாப் பேசுகிறது. செடியிலும், ஜந்துவிலும் உயிர் இருந்து செய்யும் ப்ரதிக்ரியை ஒரேமாதிரி யென்பது என் சோதனைகளால் முழுதும் உறுதிப்பட்டது. இதை எப்படிக் காண்கிறோமென்றால், இரண்டுக்கும் ஒன்று போலே சிறிது நேரம் ப்ரக்ஞை தவறுதல் உண்டாகிறது. அதைத் தான் நாம் தூக்கம் என்று சொல்லுகிறோம். மரணாவஸ்தை செடியினிடத்தும், ஜந்துவினிடத்தும் ஒரு மாதிரியாகவே காணப்படுகிறது. மேலும் ஜந்துவுக்கு மார்பு துடிப்பது போலே செடிக்கும் நரம்பு புடைக்கிறது. செடி, மிருகம் இரண்டின் நாடிகளிலும் லாஹரிவஸ்து, மூர்ச்சை மருந்து, விஷம் என்ற மூன்றின் செய்கையும் ஒரே விதக் காட்சி பயக்கின்றது. இங்ஙனம் மருந்துகளின் உடம்புத் தொழில்களில் உள்ள ஒற்றுமையை நான் காட்டினது பெரிய விசேஷ மென்றும், அத

னால் வைத்ய சாஸ்த்ர அபிவிருத்திக்கு இடமுண்டென்றும், பெரிய வைத்யர் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஏனென்றால், ஜந்துவின் வயிற்றுக்குள்ளே மருந்தின் தொழிலை அறுத்துப் பரிசோதனை செய்வதை காட்டிலும், செடிகளுக்குள்ளே காணுதல் எளிது, ஸூக்ஷமம், ஜீவ காருண்யம்; செடிகளின் வளர்ச்சியையும் வெவ்வேறு சிகித்ஸையில் அவ்வளர்ச்சியிலே ஏற்படும் மாறுதல்களையும் என்னுடைய "வ்ருத்தி தர்சினீ(Oreseograph)என்ற கருவி தக்ஷணமே குறித்துவிடும். இந்தப் பரீக்ஷையால் பயிர்த்தொழிலுக்கு அபிவிருத்திகிடைக்குமென்று தக்க பண்டிதர் கருதுகிறார்கள். வளர்ச்சியின் வேகத்தில் மாறுதல் உண்டாகிற நிலைமைகளை வகுத்து நோக்கித் தனித்தனியே சோதனை செய்யும் திறமை முதல் முதல் இந்தக் கருவியால்தான் உண்டாகிறது. இதற்கு முன் பல மாஸங்கள் உழைத்து இடையே எதிர்பாராத மாறுதல்கள் உண்டாகிப் பழுதுபடத் தக்கனவாக இருந்த சோதனைகளை இக்கருவியால் சில நிமிஷங்களுக்குள் செய்து பார்த்து விடலாம்.

இனி சுத்த சாஸ்த்ரம் பேசுவோம்:—செடிகளின் உயிர்க் காட்சிகள் எல்லாவற்றிலும், அதிக வேறுபாடுகளுக்கிடமாய்ப் பொதுவிதி காட்ட முடியாத காட்சிகள் எவை? வளைவுகள் இவையாவன (1) ஒளிபற்றின வளைவுகள். (2) பூமி சம்பந்தமான வளைவுகள். ஒளியை நோக்கிச் சில கொடிகளும், அதனை விலக்கிச் சில கொடிகளும் படர்வன ஒளிபற்றின வளைவுக்குத் திருஷ்டாந்தங்கள். வேர்களையும், முளைகளையும் போலே சில பூ மத்யத்தை நோக்கியும், சில அதனை விலகியும் படர்தல் பூமி பற்றின வளைவுக்குத் திருஷ்டாந்தம்.

நான் இந்த விஷயமாக ஸமீபத்தில் "ராயல் ஸொஸைடி"யாருக்கு அனுப்பியிருக்கும் ஆராய்ச்சி முடிவுகளில், இங்ஙனம் முழுதும் முரண்பட்ட சலனங்களுக்குள்ளே பொது ஆதாரமான ஒரே ப்ரதிக்கிரி ஸ்தாபனம் செய்யப்படுகிறது. செடிகளில் நரம்பு புடைக்கும்விதம் நான் நிரூபணம் செய்ததிலிருந்து, கிளைத்ததாகிய இந்தப் புதிய சாஸ்த்ரத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறுதல் பொருந்தும். செடியில் நாடி வேகத்தை நான் அளவிட்டிருக்கின்றேன். செடி நரம்புகளின் கிளர்ச்சியையும், அக்கிளர்ச்சியில் நிகழும் மாறுதல்களையும் அளந்திருக்கிறேன். செடியிலும், மனிதனிடத்திலும் ஒரேவிதமான சிகித்ஸைகளால் களிப்பு அல்லது தடை ஏற்படுவதைக் கண்டேன். அதிவிசேஷ விஷயங்களிலேகூட இந்தப் பொதுமை காணப்படுகிறது. வெளித் தாக்குதல்களுக்குட்படாமல் கண்ணாடிக்குள் பத்ரமாகக் காக்கப்பட்ட செடி பார்வைக்கு மழ மழ என்று புஷ்டியாக இருக்கும். ஆனால் அச்செடியில் மேல்தரமான நரம்புச் செய்கை க்ஷீணமடைந்துபோகும். இவ்வாறு பழுதுபட்டுக் கொள்ள கொளத்துப் போயிருக்கும் செடியின் மீது பல அடி அடித்தால், அதனால் நரம்புப் பாதைகள் தோன்றி முன் கெட்டிருந்த இயற்கையைப் புதுப்பிக்கும்.

வறுமையின் அடிச்சாலன்றோ ஒருவன் மெய்யான ஆண்மை பெறுகிறான்? பஞ்சு மெத்தைக்குள் மூடி வைத்திருந்தால், ஆண்மை யுண்டாகாது

ஞாபக சக்திக்கு ஆதாரமான ரஹஸ்யம் என்னவென்ற சங்கை சரீர சாஸ்த்ரிகளையும், மன சாஸ்த்ரிகளையும் நெடுங்காலமாகக் கலங்கவடிக்கிறது. ஆனால் நான் இப்போது செய்திருக்கும் சில சோதனைகளால் உயிரில்லாத பதார்த்தங்களில்கூட ஞாபகத்தின் அடையாளங்கள் பதிந்திருக்கின்றன என்பது காணப்படுகிறது. அந்த ரஹஸ்யச் சுவடுகளை மீளவும் உயிர்ப்பிக்க லாம். முக்ய உணர்வுக் கருவியாகிய மூளையில் நரம்புக் கிளர்ச்சியால் உணர்ச்சி யுண்டாகிறது. அந்த உணர்ச்சியின் மாத்திரை அந்தக் கிளர்ச்சிக்குத் தக்கபடி எனவே, நரம்பைக் கிண்டிவிட வழியிருந்தால், உணர்ச்சியின் வடிவத்தை மாறுபடுத்தலாமென்ற கொள்கைக் கிடமுண்டாகிறது. செடிகளின் நரம் பியக்கத்தைப்பற்றி நான் செய்த ஆராய்ச்சிகளிலிருந்து, ஒரு நியாயநெறி கண்டு பிடித்திருக்கிறேன். அதனால் ஜந்துவின் நரம்பியக்கத்தையும் கட்டி ஆளலாம்.

இங்ஙனம் பௌதிக சாஸ்த்ரம், மன சாஸ்த்ரம், சரீர சாஸ்த்ரம் மூன் றின் எல்லைகளும் ஓரிடத்தே சந்திக்கின்றன. பல பதார்த்தங்களில் ஒரு பதார்த்தத்தைக் காண விரும்புவோர் எல்லாரும் இந்த சாஸ்த்ர மாளிகையில் கூடுவார்கள். இங்கு ஹிந்து தேசத்தின் மேதை தனது மெய்யான பக்வ தசை அடையும்.

ஜடத்திலே அதிர்ச்சி, உயிரில் புடைப்பு, வளர்ச்சியில் ஏற்றம், நரம்பிலே கிளர்ச்சி, அதன் பின் அறிவிலே உணர்ச்சி இத்தனையும் எவ்வளவு பேத மாகத் தோன்றுகின்றன! எனினும், இவற்றில் எத்தனை ஒற்றுமை இருக்கிறது நரம்புக் கிளர்ச்சியில் தோன்றின அதிர்ச்சி ஜீவ லோகத்திலிருந்து மனோ லோகத்துக்கு இடம் பெயர்ந்ததுடன் வடிவமும் மாறிக் கண்ணாடியில் தெரி யும் நிழல் போலே உணர்ச்சியாகவும், விருப்பமாகவும், எண்ணமாகவும் மெய்ப் பாடாகவும் ப்ரதி லிப்பது எத்தனை ஆச்சர்யம்!

இவற்றுள் அதிக உண்மை எது? பூத உடம்பா? அதைக் கடந்த சித் ரூபமா? கெடாதது எது? மரணத்தால் தீண்டப் படாதது எ வேதத்தில் ஒரு ஸ்த்ரீயினிடம் பெரும் செல்வத்தை வர கேட்டுப் [illegible] ள்ளும்படி சொல் [illegible]

விளையும், மரணத் தோற்றத்தையும் கடந்த பொருள் வேறொன்றிருக்கிறது. அது யாதெனில் தழல்விட்டெரியும் அறிவுத் தீ. சந்ததிகள் மறையும், இந்தத் தீ மறையாது. அவ்விதத்தன்மையின் விதைகள் ஜடத்தில் காணப்படா, அறிவிலே காணப்படும். உடைமைகளிலும் கலைகளிலும் காணப்படா; ஆதர்சங்களில் காணப்படும். உண்மையான மனுஷ்ய ஸாம்ராஜ்யம் ஜடச் செல்வத்தை மிகுதிப் படுத்துவதனால் உண்டாகாது. கொள்கைகளையும், ஆதர்சங்களையும் உதாரத்துடன் பரப்புவதால் ஸ்தாபனமாகும். கட்டற்ற கடல்கள் சூழ்ந்த இந்த ராஜ்யத்தை முன் ஆண்ட அசோக சக்ரவர்த்தி தன் உடைமை முழுதையும் பிறருக்குத் தானம் செய்த பிறகு அவனிடம் அரை நெல்லிக்காய்தான் மிஞ்சி யிருந்தது. அதையும் அவன் என்னிடம் வேறொன்றும் கொடுக்கத் தக்க பொருள் இல்லை யாதல் பற்றி வருந்துகிறேன். இதனையே கருணையுடன் தானமாக அங்கீகரிக்க வேண்டும் என்று சொல்லிக் கொடுத்துவிட்டான். நமது சாஸ்த்ராலயத்தின் சிகரங்களிலெல்லாம், அசோகனுடைய நெல்லிக் கனியின் சின்னங்களைக் காணலாம். எல்லாவற்றுக்கும் உச்சியில் வஜ்ராயுதக் குறி இருக்கிறது, பரிசுத்தரும், பழி தீர்ந்தவருமாகிய ததீசி ரிஷி தம்முடைய எலும்பிலிருந்து வஜ்ராயுதம் பண்ணி, அதனால் அதர்மத்தை அழித்துத் தர்மத்தை மேன்மைப் படுத்தும் பொருட்டாகத் தம் உயிரைக் கொடுத்தார். நாம் இப்போது தரக் கூடியது பாதி நெல்லிக் காய்தான். ஆனால் பண்டைக் காலம் அதிக மேம்பாடு சான்ற எதிர்காலமாய்த் திரும்பி வரும். நாம் இன்று இங்கே நிற்கிறோம். நமது வாழ்நாளின் முயற்சிகளாலும், எதிர்கால விஷயத்தில் நமக்குள்ள மாறாத பக்தியாலும், இனிவரப் போகிற பாரத தேசத்தை ஆக்குவதில் நம்மால் இயன்ற துணை செய்யும் பொருட்டாக நாளை வேலை தொடங்குகிறோம்.

(ஸம்பூர்ணம்)